குமரன்
ஆரம் 20, முத்து 31
March 18, 1943

Record no. 313

*Kumaran̲*

*Āram 20, muttu 31*

*March 18, 1943*

Record no. 313

REGD. NO. M. 1823. 8 பக்கங்கள். விலை 0—2—0

சந்தா விவரம்

உள்நாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு
ஒரு 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலிய கவைகளுக்கு இஞ்ச் ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்த மானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத் திற்கு மானேஜருக் கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் மாதப் பதிப்பும் சேர்ந்தது. PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 20 | காரைக்குடி சித்திரபானு-ஹு பங்குனி-மீ 5-உ (18—3—43) | முத்து 31

## மத்ய சட்ட சபை

### உணவுப் பொருளைப்பற்றி

★

மத்ய சட்டசபையின் மார்ச் 12உ. கூட்டத்தில் வரி மசோதா ஆஜர்ப் படுத்தப்படுவது சம்பந்தமாக விவாதம் தொடரப்பட்டது.

இதர கைத்தொழில்களை—முக்கியமாக தோல் கவனியாமல் நெசவுத் தொழிலுக்கே ஸப்ளை இலாகா சலுகை காட்டி வருகிறது என்று ஸர் ஜியாவுதீன் குறைகூறினார். சர்க்காரின் உணவுப் பொருள் கொள்கையை அவர் கண்டித்து, உணவு, செலாவணி போக்குவரத்து இம் மூன்றையும் பாதுகாத்தால் தான் நாட்டிற்கு க்ஷேமம் பிறக்கு மென்றும் அவர் கூறினார்.

#### இந்தியர் படும் அவதி

ஸ்ரீ ஜம்னுதாஸ் மேத்தா உணவுப் பொருள் சம்பந்தமாக இந்திய சர்க்கார் அனுஷ்டித்து வரும் கொள்கையை வெகு அழுத்தமாகக் கண்டித்தார். உணவுக்கான போராட்டத்தில் வியாபாரிகள் பிரிட்டிஷாரை வீழ்த்திவிட்டார்களென்றும், சென்ற மூன்றரை வருஷ யுத்தத்தில் இந்தியரில் பெரும்பாலோர் உண்ணும் உணவும், உடுக்கும் உடையும் மிகவும் குறைந்துவிட்டதென்றும் அவர் எடுத்துரைத்தார். மேலும் அவர் குறிப்பிட்டதாவது:—

ஜனங்களின் வாங்கும் சக்தி அதிகரித்திருப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால் தபாலாபீஸ் ஸேவிங்ஸ் பாங்கியிலிருந்தும், ரொக்க சர்ட்டிபிகேட்டுகளிலிருந்தும் 51 கோடி ரூபாய் வாங்கப்பட்டிருக்கிறது. ஸேவிங்ஸ் பாங்கிக் கணக்கு ஏழைகளும் நடுத்தர வகுப்பினரும் போட்டுவைத்துள்ள பணமாகும். வரவைக்காட்டிலும் செலவு அதிகப்பட்டிருப்பதால் தான் அவர்கள் மேற்படி தொகையை வாங்கியிருக்கிறார்கள். உணவு உடை இப்பிரச்னைகளைத் தீர்க்கச் சர்க்கார் தவறிவிட்டனர். இங்கிலாந்தில் முக்கிய பொருள்களின் விலைவாசிகள் 21 சதவிகிதம் தான் ஏறியிருக்கின்றன; ஆனால் இந்நாட்டிலோ 100 முதல் 400 சத விகிதம் வரை உயர்ந்திருக்கின்றன.

யு. கே. ஸி. ஸி. விஷயத்தில் நான் வெளியிட்ட பல புகார்களுக்கும் வியாபார இலாகா பதில் அளிக்கவேயில்லை. இந்தியாவின் ஏற்றுமதி வியாபாரத்தில் இந்த ஸ்தாபனத்தின் செல்வாக்கு நாளுக்கு நாள் அதிகரித்து வருவதாகப் பம்பாயில் கூக்குரல் கிளம்பியிருக்கிறது.

#### சர்க்கரை விலை

சர்க்கரை விஷயத்தை எடுத்துக் கொண்டால் மணங்கு ஒன்றுக்கு ரூ. 2-5-0 வீதம் விலையை உயர்த்தியதன் மூலம் சர்க்கரையைத் தயாரிப்பவர்களுக்கு 3½-கோடி ரூபாய் கிடைக்கச் சர்க்கார் உதவியிருக்கிறார்கள்; இதனால் பொதுமக்களுக்குப் பெரு நஷ்டம். இந்த விலை உயர்வைத் தாங்கள் கோரவேயில்லை என்று பம்பாயிலும், ஐக்கிய மாகாணத்திலும் உள்ள பெரிய சர்க்கரை முதலாளிகள் என்னிடம் கூறினர்.

#### நெருக்கடி தீர வழி

ஆகஸ்ட் 8-ந் தேதி ஆரம்பித்த நெருக்கடியைத் தீர்ப்பது ரொம்பவும் சுலபம். ஆனால் உபவாஸமிருப்பது வழியல்ல: பம்பாயில் மகாநாடு கூடிய தலைவர்களாலும் நெருக்கடியைத் தீர்க்க முடியாது. மகாத்மாவுக்காக ஜாமீனிருக்க இவர்கள் யார்? நிலைமையைப் புனராலோசனை செய்யத் தயாராக இருப்பதாகக் காந்திஜியே அறிவித்திருக்கிறார், ஆகவே காவலில் இருக்கும் பொழுதுகூட காங்கிரஸ் காரியக் கமிட்டி மெம்பர்களுடன் கலந்து பேச அவருக்கு அநுமதி அளிக்க வேண்டும். நாசவேலைத் தீர்மானத்தை வாபஸ் பெறுவதாக அவர்கள் முடிவு செய்தால் காவலில் வைத்துள்ள உத்தரவைச் சர்க்காரும் வாபஸ் பெற வேண்டும். இருதரப்பினரின் கௌரவத்தையும் காத்துக் கொள்ளுவதற்காக இரண்டு முடிவுகளையும் ஏககாலத்தில் வெளியிடலாம்.

பிரிட்டனுக்கும் இந்தியாவுக்குமிடையே உள்ள பெருத்த நெருக்கடியைத் தீர்க்க அட்லாண்டிக் சாஸனம் இந்தியாவுக்கும் உண்டு என்று பிரிட்டிஷ் சர்க்கார் அறிவிக்க வேண்டும்.

#### ரஷ்யாவின் நட்பு

மிஸ்டர் பிலிப்ஸையும், கர்னல் ஜான்ஸனையும், அமெரிக்கப் பத்திரிகை நிருபர்களையும் சரிப்படுத்திக் கொண்டு அமெரிக்காவின் அநுதாபத்தைப் பெற விரும்பும் இந்தியரைக் கண்டால் எனக்குப் பிடிக்கவில்லை. ரஷ்யாவைக் கண்டு அமெரிக்கா அஞ்சுகிறது. ஆனால் நாம் ரஷ்யாவின் நட்பைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ள வேண்டும்; அப்பொழுது தான் நமக்குத் திருப்தி ஏற்படும் வகையில் யுத்தம் முடியும்.

அன்று கடைசியாகப் பேசியவர் ஸ்ரீ லால்சந்த் நாவல்ராய். யுத்தச் செலவு சம்பந்தமான கூட்டு ஏற்பாடு விஷயத்தில் மெம்பர்களையோ அல்லது பொக்கிஷக் கமிட்டியையோ ஏன் கலக்கவில்லை என்று அவர் கேட்டார். இப்பொழுதும் பிரச்னையைப் பரிசீலிப்பதற்காக ஒரு அட்ஹாக் கமிட்டியை ஏற்படுத்த வேண்டு மென்று அவர் கோரினார். புதிய வரிகளை அவர் ஆட்சேபித்தார். ராணுவத்தில் அதிகாரிகள் பதவிகளுக்கு அதிகப்படி இந்தியர் திரட்டப்படாததையும், குமாஸ்தாப் பதவிகளில் பெரும்பாலானவற்றிற்கு ஐரோப்பியர் நியமிக்கப் படுவதையும் அவர் கண்டித்தார்.

---

## காளிமீது கோபம்

### வெறிபிடித்தவன் செய்கை

மார்ச் 12-உயன்று திருஜ்பூர் காளி கோவில் விக்ரகங்கள் நொறுக்கப்பட்டதைக் கேள்வியுற்று போலீஸார் ஸ்தலத்துக்கு விரைந்துவந்து விசாரணை நடத்தினர். ஒரு வெறிபிடித்த இந்துவின் அடாத செய்கையே விக்ரகங்கள் நொறுக்கப்பட்டிருந்ததற்குக் காரணமெனத் தெரியவந்தது. தான் வேண்டிக்கொண்டபடி அம்மன் நிறைவேற்றித் தராததனால், அவ்விதம் செய்ததாக அவ்வெறியன் ஒப்புக் கொண்டதாகச் சொல்லப்படுகிறது. பின்னர், தான் காட்டில் ஒளித்துவைத்திருந்த அம்மன் சூலாயுதத்தையும் கொணர்ந்து கொடுத்தான்.

## பலம் குன்றிக்கொண்டே போகிறது





## சர்க்காரின் தற்போதைய கொள்கை மேலும் நீடிக்கும்?

### அதற்காகவே மாக்ஸ்வேல் பதவி நீடிப்பு

பன்னிரண்டு மாதங்களுக்கு மேற்படாமல் ஸர் ரெஜினல்ட மாக்ஸ்வெலின் உத்தியோக காலம் நீடிக்கப்பட்டிருப்பதன் காரணமாக அடுத்த உள்நாட்டிலாகா மெம்பர் யாராக இருப்பார் என்ற பேச்சுக்கே இனி இடமில்லை. அந்தப் பதவி ஸர் மகம்மது ஊஸ்மானுக்கா ஸர். ஏ. ராமஸ்வாமி முதலியாருக்காக அன்றி இன்னொரு ஐ. ஸி. எஸ். அதிகாரிக்குத்தானு என்ற பேச்சுக்கெல்லாம் முற்றுப்புள்ளி வைத்தாகிவிட்டது. தற்போதைய கொள்கையை விடாப்படியாக அனுஷ்டித்து வருபவர் ஸர் மாக்ஸ் வெல்தான். ஆகவே இன்னொரு வருஷத்துச்கும் அதே கொள்கையைக் கைப்பற்ற அவர் உதவியாக இருப்பார். அதற்குள் யுத்தம் முடிந்து விடுமென்று நம்பப்படுகிறது. அதே காலத்துக்குப் பொறுப்பைச் சுமக்க வைஸ்ராயும் தயாராக இருப்பாரென்று ஊகிக்கப்படுகிறது. அப்படியாயின் வைஸ்ராய் பதவியில் லின்லித்கோவைப் போல் அதிக காலம் இருந்தவர்கள் இதுவரையில் வேறு ஒருவரும் கிடையாது.

## ஸ்டர்லிங் இருப்பு 460 கோடி

மார்ச் 10உ ராஜாங்க சபையில் ஸ்ரீ தலாலின் ஸ்டர்லிங் கையிருப்புத் தொகையை உபயோகிப்பதுபற்றிய தீர்மானத்தையொட்டித் தொடர்ந்து விவாதம் நடைபெற்றது.

இத்தீர்மானத்திற்குத் திருத்த மொன்று கொணர்ந்து பண்டித இருதயநாத் குன்ஸ்ரு பேசியதாவது:—

"இந்தியாவிற்கு நலம் பயக்கு முறையில் கையிருப்பு ஸ்டர்லிங் தொகையை உப உபயோகிப்பதற்குரிய சிறந்த வழிகளைக் காண உடனே மத்ய சட்டசபைகளின் அங்கத்தினரடங்கிய கமிட்டி யொன்று அமைக்க வேண்டும்.

ஏராளமான தொகைகள் திருப்பிக் கொடுக்கப்பட்டும் பிப்ரவரி 12-ந் தேதி 460 கோடி ஸ்டர்லிங் இருப்பு இருந்து வருகிறது. இவற்றை உபயோகித்து பாக்கியுள்ள மூன்று ரயில்வே கம்பெனிகளையும் இந்தியாவிலுள்ள இந்தியரல்லாதாரின் பங்குத் தொகைகளையும் வாங்கி விடலாம். மேலும் கைத்தொழில்களுக்கு அவசியமான இயந்திரங்கள் சாமான்கள் வாங்கக் கூடும். அரசியல் முட்டுக்கட்டையைத் தீர்ப்பதே பயங்கர செலாவணிப் பெருக்கத்தைத் தடுப்பதற்குரிய வழியாகும்"

ஜனாப் ஹுஸேன் இமாம் தீர்மானத்தை யொட்டி "இவ்வருட ஆரம்பத்திலிருந்து 47 நாட்களில் 53 கோடி ரூபாய்க்கு நோட்டுச் செலாவணி வெளியிடப்பட்டிருக்கிறது. இந்த விகிதப்படி அது பெருகினால் வருஷ முடிவிற்குள் 1000 கோடி ரூபாய்க்கு அது எட்டிவிடும். அச்சுக்கூடத்தை எதிர்பார்க்கும் பைத்தியக்கார முறையைக் கைவிட வேண்டுமென நான் வற்புறுத்துகிறேன்" என்று கூறினர்.

சர்க்கார் சார்பாகப் பதில் அளிக்கும் பொழுது பொக்கிஷ இலாகா காரியதரிசி மிஸ்டர் எப். இ. ஜோன்ஸ் குறிப்பிட்டதாவது:—

"ஸ்டர்லிங் பெருக்கத்தால் தான் செலாவணி அதிகரித்ததாகக் குறிப்பிடப்பட்டது. ஒரு குறிப்பிட்ட தேசத்தின் யுத்தப் போக்கை யொட்டியே அதன் செலாவணிப் பெருக்கும் உள்ளது. சென்ற வருடம் இந்தியா மீது படையெடுக்கப் படலாமென்ற பயமிருந்ததால் ஏராளமாகச் செலவிட நேரிட்டது. அதைப்போலவே அக விலை உயர்வுக்கும் யுத்தமே காரணம். யுத்தம் நீடிக்க அக விலையும் அதிகரிக்கும்.

இந்தியக் கைத்தொழில் அதிகரிப்பே ஸ்டர்லிங் தொகை பெருகியதற்குரிய காரணம். ஒரு பக்கம் இருப்பு பெருகவும், மறுபக்கம் கடன் வளரவும் அநுமதிப்பது சரியல்ல தான். யுத்தத்திற்குப் பின் புனரமைப்பு வேலைகள் புனரமைப்புக் கமிட்டி வசம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் ஸ்டர்லிங் தொகை சம்பந்தமாகத் தனிக்கமிட்டி தேவையில்லை. யுத்த நிலைமையில் பிரிட்டன் ஸ்டர்லிங் இருப்பிற்குத் தக்க சரக்குக் கொடுப்ப தென்பது முடியாது. தங்கம், வெள்ளியாகத் திரும்பக் கொடுப்ப தென்பதும் முடியாத காரியம். ஏனெனில் அவை கிடைக்க வில்லை.

திருத்தி யமைக்கப்பட்ட தீர்மானத்தை ஸ்ரீ தலால் அங்கீகரிக்க தீர்மானம் நிறைவேறியது.

### புது ஸ்டாம்பு

ஆறும் ஜார்ஜ் உருவம் தாங்கிய புதிய மாதிரியான ஒரு அணாத்தலைகள் ஏப்ரல் முதல் தேதியிலிருந்து சில முக்ய தபாலாபீஸ்களில் விற்பனைக்குக் கிடைக்கும். மற்ற ஆபீஸ்களில் கொஞ்சம் தாமதமாகக் கிடைக்கும். புதிய ஸ்டாம்பின் கலர் பழைய ஸ்டாம்பு மாதிரியே இருக்கும்.







## காந்திஜியை விடுதலை செய்க

### தலைவர்கள் அறிக்கை

பம்பாயில் கூடி விவாதித்து வரும் அகில இந்தியத் தலைவர்கள் 35 பேர் கையொப்ப மிட்டு பின்வரும் அறிக்கையை வெளியிட்டிருக்கின்றனர்:—

சென்ற சில மாதங்களாக நாட்டில் நடந்துள்ள வருந்தத்தக்க சம்பவங்கள் காரணமாகச் சர்க்காரும் காங்கிரஸும் தங்கள் கொள்கையை புனராலோசனை செய்ய வேண்டிய தவசிய மென்று நாங்கள் அபிப்பிராயப்படுகிறோம். எங்களில் சிலர் சமீபத்தில் காந்திஜியைக் கண்டு பேசியிருக்கிறார்கள். இப்பொழுது சமரஸத்துக்கான முயற்சியில் இறங்கினால் அது பலனளிக்குமென்று அவர்கள் நம்புகின்றனர்.

காந்திஜியை விடுதலை செய்தால் உள்நாட்டு நெருக்கடியைத் தீர்த்து வைப்பதில் அவர் வழிகாட்டி, உதவி புரிவாரென்றும், யுத்த முயற்சிக்கு குந்தகம் ஏற்பட்டு விடுமென்று பயப்பட வேண்டிய அவசியமில்லை என்றும் நாங்கள் உறுதி கொண்டிருக்கிறோம்.

சமீபத்தில் நடந்த சம்பவங்கள் விஷயத்தில் காந்திஜியின் கருத்தென்ன என்பதை அறிவதற்காகவும், சமரஸத்துக்கு வழி தேடுவது குறித்து அவருடன் கலந்து பேசவும் அவரைச் சந்திக்க எங்களில் சிலரை அநுமதிக்குமாறு எங்கள் சார்பில் வைஸ்ராயை அணுகலாம்.

### மைதா மாவு சப்ளை

காரச்சியிலிருந்து சென்னைக்கு 500 மணங்கு மைதாமாவு கப்பல் மூலம் அனுப்பப்பட்டிருக்கிறது. இன்னும் சில நாட்களில் மேலும் 500 மணங்கு அனுப்பப்படும்.



## உணவுப் பொருள் நிலைமை

★

'உணவு நிலைமை'பற்றி மார்ச் 11உ மயிலை ரானடே ஹாலில் யுத்தக் கமிட்டியின் ஆதரவில் நடந்த கூட்டத்தில் கவர்னர் ஆலோசகரான ஸர் எச். எம். ஹுட்டும், கூட்டுறவு இலாகா ரிஜிஸ்டிராரான ஸ்ரீ டபிள்யூ ஆ. எஸ். ஸத்தியநாதனும் பேசினர்கள்.

"உணவுப் பொருள் பிரச்னையும் கூட்டுறவுச் சங்கங்களும்" என்பது பற்றிப் பேசுகையில் ஸ்ரீ ஸத்தியநாதன் குறிப்பிட்டதாவது:—

உணவுப் பொருள் உற்பத்தியை அதிகரிக்கக் கூட்டுறவுச் சங்கங்கள் கடனுதவி விற்பனை முதலியவை மூலம் மிக உதவுகின்றன; எரு விதை முதலியவை விநியோகிப்பதிலும் விவசாய இலாகாவுடன் ஒத்துழைக்கின்றன. உணவுப் பொருள்களை மொத்தமாக விநியோகிக்க தஞ்சை, நெல்லூர், மேலக் கோதாவரி, குண்டூர் முதலிய ஜில்லாக்களில் கூட்டுறவு சமஷ்டிகள் ஏற்பட்டுள்ளன. 1941-42-ல் பால் ஸப்ளை சங்கங்கள் ரூ 8 லக்ஷம் பெறுமான பால் நெய் முதலியவற்றை விற்றிருக்கின்றன. நமது மாகாணத்தில் இப்போது 730 கூட்டுறவு விற்பனைச் சங்கங்களும், அது தவிர அவற்றின் கிளைகளும் டெப்போக்களு மிருக்கின்றன. சென்ற வருஷப் பிற்பகுதியில் இவை சுமார் ஒரு கோடி மதிப்புள்ள சரக்குகளை விற்றுள்ளன. உணவுப் பொருள்களின் விலைகளை ஸ்திரப்படுத்துவதில் இச்சங்கங்கள் முக்கியமானவை.

தலைமை வகித்த ஸர் ஹுட் பேசியதன் சாரம்:—உணவுப் பொருள்கள் விநியோகத்தில் கூட்டுறவு சங்கங்கள் செய்துள்ள அரிய உதவிக்குச் சர்க்கார் பெரிதும் கடமைப் பட்டுள்ளனர். உணவுப் பொருள் நிலைமையைச் சர்க்கார் ஜாக்கிரதையாகக் கவனித்து வருகின்றனர். ஏழை மக்கள் சம்பந்தப்பட்டவரை பருப்பு முதலியவையும் அரிசி போன்று முக்கியமாதலால் அதை ஏராளமாக வட இந்தியாவிலிருந்து வரவழைக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

### அரிசி நிலைமை

அரிசி நிலைமை அவ்வளவு பயமளிக்கக் கூடியதெனக் கூறுவதற்கில்லை. பர்மா முதலிய பிரதேசங்களிலிருந்து இறக்குமதியாவது நின்றதாலும் வடமேற்கு மான்ஸூன் பிரதிகூலமானதாலும் கஷ்டமேற்பட்ட துண்மையே. ஆயினும் அதற்கீடாகச் சில நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன. திருவாங்கூர், இலங்கை முதலிய இடங்களுக்கு அரிசி ஏற்றுமதி செய்வதை நிறுத்தியிருப்பதும், உணவுப் பொருள் உற்பத்தியைப் பெருக்க நடக்கும் முயற்சிகளும் அனுகூலமான நடவடிக்கைகள். ஒரிஸா மாகாணத்திலிருந்தும் அரிசி வரவழைக்க ஏற்பாடுகள் பூர்த்தியாகியுள்ளன. அரிசி ஸப்ளை போதிய அளவு இருக்கும் வரை யாரும் அரிசியின்றிக் கஷ்டப்படுமாறு விடுவதில்லை யெனச் சர்க்கார் தீர்மானித்திருக்கிறார்கள். அவசியம் நேர்க்தால் சரக்கைச் சர்க்காரே வாங்கிக் கொண்டு, உணவுப் பங்கீடும் செய்யத் தயாராயிருக்கின்றனர்.

### குறைவாகத் தீட்டுவதால் சிக்கனம்

உணவுப் பொருள் ஸப்ளை விஷயத்தில் ரயில்வேக்களும் கொஞ்சம் தாமதம் நடந்தாலும்கூட, மிக ஒத்துழைக்கின்றன. அரிசியை ஒரு பிரதேசத்திலிருந்து மற்றொரு பிரதேசத்துக்கு அனுப்புவதையும் சர்க்கார் கட்டுப்படுத்தியுள்ளனர். நெல் அரைப்பதில் ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் தீட்டக்கூடா தெனவும் சர்க்கார்

(4-ம் பத்தி பார்க்க)

(1-ம் பத்தித் தொடர்ச்சி)

உத்திரவிட்டிருக்கிறார்கள்; இதனால் சுமார் 6 சதம் மிச்சப்படும். நம்மிடமுள்ள 50 லக்ஷம் டன் அரிசியோடு இந்த 6 சதமும் (அதாவது 3 லட்சம் டன்) சேர்க்தால் பர்மாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டதற்கு அது ஈடாகிவிடும். ஜனங்கள் சேமித்துவைக்க முயற்சிக்காமல் தேவையையும் கட்டுப்படுத்திக்கொண்டால் மழை மோசம் செய்யாதவரை பயத்திற்குக் காரணமில்லை யெனக் கூறலாம்.

விலைகள் சம்பந்தப்பட்டவரை அவை மிக்க அதிகமெனக் கூறுவதற்கில்லை. சென்ற 40 வருஷமாக விலைகளைக் கவனித்தால், இயற்கையாக இந்த விலையே இப்போது இருக்கவேண்டுமென்பது தெளிவாகும். 1920-ஆம் விலைத் தாக்கலும் அதன் விளைவான 1930-ஆம் விலைக் குறைவுமே இப்போது விலை அதிகமாயிருப்பதாகத் தோன்றுவதன் காரணம்.

ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் சர் ஹுட் கூறியதாவது:— சொந்த நிலம் உடையவர்கள் அதில் விளைந்த நெல்லை நகருக்குக் கொண்டுவருவதற்கும் இப்போது தடை விதிக்கப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்டவர்கள் இரண்டு மூட்டை வரை கொண்டுவரலாமென்று முன்பு அளித்த சலுகை சில வியாபாரிகளால் துஷ்பிரயோகம் செய்யப்பட்டதே இத்தடையின் காரணம். தன் நிலத்தைத் தானே சாகுபடி செய்யாமல் அதன் பலனை மட்டும் பெறுவோர் சம்பந்தமான பிரச்னை இது. இவர்களுக்கு மீண்டும் சலுகையளிப்பதில் பல இடைஞ்சல்களிருக்கின்றன. இருப்பினும் இதுபற்றி நான் மீண்டும் சிவில் சப்ளைக் கமிஷனரிடம் ஆலோசிப்பதாக உங்களுக்கு உறுதி கூறுகிறேன்.

## பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கம்

★

நகரத்தார்கள் பர்மாவிலுள்ள தங்கள் அசையும் பொருள்களை (Moveable stock) 31—3—43-க்குள் பதிந்துகொள்ள வேண்டும். இதர அசையாப் பொருள்களையும் (Immoveable properties) இன்னமும் காலதாமதம் செய்யாமல் சீக்கிரம் பதிவுசெய்து கொள்வது நலம். சொத்துரிமைகளை பர்மா சர்க்காரிடம் பதிவுசெய்து கொள்வதற்குரிய பாரங்கள் சங்கத்தில் தயாராகியிருக்கின்றன. செட் ஒன்று 8 அணா வீதமும் மேற்கொண்டு தேவைப்படும் B. D. E. & F. ஷெடியூல்கள் ஒன்று ஒரு அணா வீதமும் சப்ளை செய்யப்படும்.

பர்மா, மலேயா முதலிய பிரதேசங்கள் மீண்டும் பிடிபட்ட பிறகு இந்தியர்கள் முக்கியமாக நகரத்தார்கள் அங்கு போய் வருவதற்கும் தங்கியிருப்பதற்கும் தொழில் நடத்துவதற்கும் ஏனைய விஷயங்களுக்கும், எத்தகைய நிபந்தனைகள் அல்லது சலுகைகள் இருக்கலாம் என்பதை கலந்தாலோசித்து சீக்கிரத்தில் சங்கத்திற்குத் தெரிவித்தால், சமீபத்தில் இந்திய சர்க்காரிடமும், பர்மா சர்க்காரிடமும், இது சம்பந்தமாய் பேச்சு வார்த்தைகள் நடக்கக்கூடுமென்று அறிவதால் அதிகமும் உதவியாயிருக்கும்.

106, அர்மீனியன் தெரு மதராஸ். — அ. மு. மு. வெள்ளையன் செட்டியார், தலைவர்.





### இந்துமதாபிமான சங்கம் காரைக்குடி

#### பெரியார்கள் விழா

பங்குனி-மீ 1உ (14-3-43) மாலை 6 மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவரின் 110-வது பிறந்த தினக்கொண்டாட்டமும், சுவாமி விவேகானந்தரின் 81 வது பிறந்த தினக் கொண்டாட்டமும் நடைபெற்றது. அது சமயம் இவ்வூர் முனிசிபல் பள்ளிக்கூட ஆசிரியர் ஸ்ரீ R. நடராஜன் அவர்களும் ஸ்ரீ பா. ஜெகத்ரக்ஷகன் அவர்களும் முறையே பக்தியும் சக்தியும்—பெரியார் வாழ்வு என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவு ஆற்றினர்கள். 7½ மணிக்கு விழா இனிது நிறைவெய்தியது.

குமரன்

காரைக்குடி

சித்திரபானு-ஞு பங்குனி-மீ 5வ

## கம்பர் திருநாள்

'கல்வியிற் பெரிய கம்பர்' பிறந்து வாழ்ந்து பல நூற்றாண்டுகளாகி விட்டன. அவருடைய உயிர்க் காவியம் தமிழ் நாடெங்கணும் பரிமளிக்கிறது. "பூமகளின் புன்னகை போற் பூத்திடுவோமே, கம்பன் பா மணக்கும் தமிழினைப் போல் பரிமளிப்போமே" என்று கவி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள் பாடுகிறார்கள். காலவேற்றுமையில் மங்கிப்போகாமல் புத்துயிர் பெற்று நாளுக்குநாள் ஒளி வீசி வளர்ந்துவரும் கம்பன் கவிகளில் முழுகித் திளைக்காத தமிழ்ப் புலவர்கள் இருப்பதற்கில்லை. கம்பன் கவிகள் சென்ற பல காலமாகப் பெரும்பாலும் புலவர்கைப் பொருளாக இருந்துவந்த தென்பதில் ஐயமில்லை. அந்தப் பெருநூல் புலவரே யன்றிச் சாதாரண மக்கள் யாவரும் படித் தின்புறக்கூடிய தொரு நூல் என்ற உணர்வு இப்பொழுதுதான் அரும்பிவருகிறது. இன்னும் குழந்தைகளும், வழிப்போக்கர்களுங் கூடக் கம்பர் கவிகளை ரசிக்க முடியுமென்ற அளவில் கொண்டுவர முடியும்; கொண்டுவரவேண்டும்.

தமிழ்நாட்டில் ஒருவிதமான தமிழ்ப் பற்று வளரும் குறிப்புத் தோன்றி எழுகின்றது. எங்கும் தமிழபிமானம் தலையெடுத்து வருகிறது. அதற்கொரு ஆதரவும் வளர்ச்சியும் ஏற்பட்டிருப்பதை நன்கு அறிகிறோம். இதன் பயனாக நாடு முழுமையும் தமிழிலக்கியமும் மற்ற தமிழ்க் கலைகளும் புத்துயிர் பெற்று வளர்ந்து சிறக்குமென்று கருதலாம். கலை வளர்ச்சிக்கும் இலக்கிய வளர்ச்சிக்கும் ஆசிரியர்களைப் போற்றி விழா வெடுப்பது, சிறந்ததும் பயனளிக்கக்கூடியதுமான முறையாக இருக்கிறது. கம்பர் விழா திருநெல்வேலி, சென்னை, தேரழுந்தூர் முதலிய இடங்களிலும் பிற இடங்களிலும் நடைபெறுவதுண்டு. காரைக்குடியில் நடைபெறும் கம்பர் விழா, தொடங்கப்பட்ட சில ஆண்டுகளிலேயே மிகப் பிரபலமடைந்துவிட்டது. இவ் விழா கால வித்தியாசத்தால் இவ் வாண்டு நடைபெறவில்லை யென்ற துக்ககரமான செய்தி காதில் விழுந்துவிட்டது. கவியரசரான கம்பர் விழா நடக்க முடியாத காரைக்குடியில், சேணிய நண்பர்களால் நடத்தப்படும் ராம நாடகம் தெருவில், "என்ன சொன்னடா எந்தன் சானகி சீதா ஏது சொன்னடா! தம்பி லட்சுமணு?" என்று இன்று தங்கு தடையின்றி நடந்துகொண்டிருக்கிறது. மகார்நோன்புப் பெரும் பொட்டலில் காமண்டியை "ரதியே ரதிக் கிளியே—யே ரதிக் கேத்த மம்முதரே மம்முதரே" என்று பாடி இரவு முழுமையும் ஆடிக்கொண்டிருக்கிறார்கள்.

கம்பர் திருநாளன்று (மார்ச் 22வ) விழா கொண்டாடுவதில் யாருக்கும் தடையிருப்பதற்கில்லை. அதைத் தடுப்பதற்கு மில்லை. கூட்டங் கூடுவதைப் பற்றித்தானே அபிப்பிராய பேதம்.? கம்பர் நாளன்று தமிழ்நாட்டிலுள்ள யாவரும் கம்பரை நினைப்பாராக. இயன்றவரை விழாக் கொண்டாடுவாராக. அவர் புகழ்—அவருடைய கவிச் சுவை—கலைப்பெருக்கு எங்கும் பரிமளிக்கச் செய்வாராக. பெரிய கூட்டம் போட்டுத்தான் ஆகவேண்டுமென்பதில்லை. ஒவ்வொரு தமிழ்க் கழகமும் ஒவ்வொரு தமிழ்ப் பள்ளிக் கூடமும் கம்பரைப்பற்றி அறிதல் வேண்டும். அறிஞர்கள் அங்கே சென்று அறிவிக்க முயலுதல் வேண்டும். மாணவரும் வீட்டில் இருக்கும் பெண்டுகளும் கம்பர் கவியையும் கம்பரையும் அறியும்படி செய்ய வேண்டும்.

கம்பர் விழா என்றும் நடக்கும்; எப்படியும் நடக்கும். அதற்குக் காலமில்லை. முக்காலமு மிருந்து நடைபெற வேண்டிய காரியம். ஆனல் காரைக்குடிக் கம்பர் விழாவை யொட்டி, கவி தேசிக விநாயகம் பிள்ளையவர்களின் வருகை நிச்சயப்படுத்தப் பட்டிருந்தது. அவர்களைச் சென்ற பல ஆண்டுகளாக, சுமார் 10 ஆண்டுகளாக இங்கே வரவழைக்க முயற்சி நடந்துதான் வருகிறது. இயலவில்லை. இந்த ஆண்டு கம்பர் விழாவை யொட்டி வரவழைக்கச் செய்த ஏற்பாட்டை அவர்கள் ஒப்புக் கொண்டார்கள். ராஜமரியாதை—யாருக்கு மில்லாத வரவேற்பு செய்ய செட்டிமார் நாடு தயாராக இருந்தது. இந்த மாபெருங் காரியம் கம்பர் விழாத் தடையோடு தடைப்பட்டது ஆற்ருெணு வருத்தந்தரும் செய்தியாகும். கவி தேசிக விநாயகம் பிள்ளையவர்கட்குச் செய்யவிருந்த பாராட்டு இங்கே செய்ய முடியவில்லை யென்ருலும் தாமதியாமல் கவி அவர்களின் இல்லத்திலேயோ அல்லது அவர்களுடைய ஊரிலேயோ தகுந்த ஏற்பாடு செய்து செட்டிமார் நாட்டு அன்பர்களின் பாராட்டை நடத்தி அன்பைக் காட்டிக் கொள்ள வேண்டுமென்று விரும்புகிறோம். அவர்களின் உடல் நோய்வாய்ப் பட்டுக் குணமடைந்துள்ள இந்த நேரத்தை எக்காரணத்தை முன்னிட்டும் நழுவ விடுவது புத்திசாலித்தன மன்றென்பதை யறிவ தவசியமாகும்.

—

### காரைக்குடி தமிழிசைச் சங்கம்

28—3—43 மாலை 5 மணிக்கு காரைக்குடி ஹைஸ்கூலில் 2-வது ஆண்டு 3-வது இசையரங்கு திருமதி குமாரி ருக்மணி அன் பார்ட்டியாரால் பரத நாட்டியமும்—அபிநயமும் நடைபெறுமென்று அறிவிக்கப் படுகிறது.

—

### புளி, மிளகாய், கோத்தமல்லி, புண்ணுக்கு

மைசூர் சர்க்கார் இந்தியப் பாதுகாப்பு விதிகளின்படி சமஸ்தானத்தின் எந்தப் பாகத்திலிருந்தும், வெளியிடங்களுக்கு புளி, மிளகாய், கொத்தமல்லி எல்லாவிதமான பிண்ணுக்குகள் ஆகியவற்றை லைசென்ஸின்றி கொண்டு போகக்கூடாதெனத் தடை செய்துள்ளனர்.

—

### பர்மாவில் பெரும் படை குவிப்பு

சென்ற சில வாரங்களாக பர்மாவில் ஜப்பானியர் அதிகப் படைகளைக் குவித்து வருவதாக நம்பத்தக்க இடத்திலிருந்து செய்தி கிடைத்திருக்கிறது. மாஸ்கோவில் முன்பு சீன ஸ்தானீகராக இருந்த ஜெனரல் யாங்சீ, இந்த வருஷம் ஜப்பான் சீன மீது பெரிய தாக்குதலை நடத்தக்கூடும் எனத் தெரிவித்தார்.

சீனவுக்கு வடமேற்கிலிருந்தும் தென் மேற்கிலிருந்தும் சம்பந்தம் இருப்பதைத் தடுத்து, நேசதேசங்கள் டோக்கியோவைத் தாக்குவதற்கு அனுகூலம் புரியும் தளங்களைத் தங்கள் வசம் கொள்வதும் தான் இதன் உத்தேசம் என அவர் மேலும் கூறினர்.

—

### மஞ்சூரியாவிலிருந்து ஜப்பானியப்படை வாபீஸ்

ரஷ்யாவுக் கருகிலுள்ள மஞ்சூரியப் பிரதேசங்களிலிருந்து வானமான துருப்புகளை ஜப்பான் வாபீஸ் பெற்றுவிட்டதாக பர்லினில் சம்பந்தகுந்த விடத்திலிருந்து தகவல் தெரிகிறது. இத் தகவல் பர்லினில் அதிகாரிகளுக்குக் கவலையை உண்டாக்கியிருப்பதாகக் கூறப்படுகிறது.

## தேவகோட்டை
## உ. ராம. உ. மு. சுப. லெட்சுமணன் செட்டியார்

ஸ்ரீமான் லெட்சுமணன் செட்டியாரவர்கள் காரைக்குடி (கேமங்கோவில்) சு. கும. குமரப்ப செட்டியாரவர்களின் மூன்ருவது குமாரராக 22—1—1893-ல் பிறந்தார். தேவகோட்டையில் செல்வந்தர் குடும்பமான உ. ராம. குடும்பத்தில் உ. ராம. உ. மு. சுப்பிரமணியன் செட்டியாரவர்கட்கு இவர் 10 வயது குழந்தையாக இருக்கும்போது சுவீகார புத்திரனகக் கொள்ளப்பட்டார். தொழில் முறையில் நாளுக்கு நாள் செல்வவளம் பெருகிவந்தது. தேவகோட்டையில் இவருடைய செல்வாக்கு நாளுக்கு நாள் வளர்ந்தது. தேவகோட்டையில் தனிமனிதர்கள் உயர்ந்து செல்வாக்கடைவது கஷ்டமானுலும் இவருடைய செல்வாக்கு மட்டுப்பட வில்லை. அங்கு நடைபெறும் எந்தக் காரியங்களிலும் இவர்களுடைய தொடர்பும் யோசனையும் தேவைப்பட்டிருந்த தென்பது குறிப்பிடத் தக்க விஷயமாகும். மலாய் நாட்டில் முக்கியமான பல ஊர்களில் பிரபலமான விலாசமாக கடைகள் உண்டு. இந்தியன் பாங்கியில் சென்ற மூன்ருண்டுகளாக டயரக்டர் பதவியிலிருந்து வருகிருர்கள். இராமநாதபுரம் ஜில்லா போர்டில் சில வருஷமும் தேவகோட்டைத் தாலுகா போர்டில் சுமார் எட்டு வருஷங்களும் மெம்பராக இருந்திருக்கிருர்கள். குடும்பப் பொதுவில் திருக்காளாஸ்திரியில் ஒரு வேதபாடசாலையும், தேவகோட்டையில் ஒரு வேதபாடசாலையும், திருப்புவனத்தில் திருப்பணியும் பசுமடமும், மதுரையில் தண்ணீர்ப்பந்தலும் தர்மம் செய்யப்பட்டுள்ளன. இவர்கட்கு முதல் தாரமாக உள்ளூரிலேயே வெ. ஆ. அரு. அருணுசலம் செட்டியார் மகளையும், இரண்டாந்தாரமாக ஷ்டியார் குடும்பத்திலேயே முருகப்பசெட்டியார் மகளையும் மணம் செய்விக்கப் பெற்றது. முதல் தாரத்துக்கு மூன்று ஆண்களும் இரண்டு பெண்களு மிருக்கின்றனர். இரண்டாந்தாரத்துக்கு மூன்று ஆண்களும் மூன்று பெண்களும் உள்ளனர்.

### நோட்டுகளைத் தயாரிக்கச் சதி ?

ஏராளமான கரன்ஸி நோட்டுகளைத் தயாரிக்க ஒரு சதி நடந்து வந்ததாகக் கூறப்பட்டு வந்த விஷயம் லாகூர் ஸ்பெஷல் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் வெளியாயிற்று. பல்லாயிரக் கணக்கான ரூபாய்கள் மதிப்பான கரன்ஸி நோட்டுகளைத் தயாரித்ததாக 16 பேர்கள் மீது குற்றப்பத்திரிகை வாசிக்கப்பட்டது. அவர்களில் ஒருவர் வக்கீல். எதிரிகள் ஜம்மு, ஸியால்கோட், ராவல்பிண்டி ஆகிய இடங்களில் தங்கள் காரியங்களை நடத்திவந்ததாகக் கூறப்படுகிறது. எதிரிகள் ஸெஷன்ஸ் கோர்ட்டில் விசாரணை செய்யப்படுவர்.

### அரிமழம்

மினர்வா கிளப்பின் நாலாவதாண்டு விழா 13—3—43 மாலை 5 மணிக்கு புதுக்கோட்டை ஸ்ரீமான் K. நாகராஜய்யரவர்கள் B.A., B.L., தலைமையில் கொண்டாடப்பெற்றது. (5-15 P.M.) தேநீர் விருந்து நடந்ததின் பிறகு காரியதரிசி சித. நடராஜன் அவர்களால் அறிக்கை வாசிக்கப்பெற்ற பின் புதுக்கோட்டை திரு. வெங்கட்ராம சர்மா அவர்கள் 'டென்னிஸ்' விளையாட்டைப்பற்றி நீண்டதோர் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். தலைவரவர்கள் முடிவுரைக்குப் பின் வந்தனோபசாரங் கூறப்பெற்று திரு. து. சுப்பையா அவர்கள் பாரதியாரின் கீதம் பாட நிறைவெய்தியது.

### பத்திரக் கட்டண உயர்வு

ரூ. 5000 மதிப்புக்கு மேல்பட்ட பத்திரங்களுக்கு ரூ. 1000க்கு இப்பொழுது வசூலிக்கப்பட்டு வரும் ரிஜிஸ்திரேஷன் கட்டணத்தைக் காட்டிலும் 100-க்கு 50 வீதம் அதிகமான கட்டணம் வசூலிக்க வேண்டுமென்று சென்னை சர்க்கார் பிறப்பித்துள்ள உத்தரவு ஜனங்களுக்கு அதிகக் கஷ்டத்தைக் கொடுக்கக்கூடியதாக விருப்பதால், ரூ. 5000-க்கு மேற்பட்டுள்ள தொகைக்கு ரூ. 1000-க்கு விதிக்கப்பட்டு வரும் கட்டணத்தை ரூ. 2-0-0 லிருந்து ரூ. 2-8-0 ஆக மட்டும், உயர்த்தச் சர்க்கார் முடிவு செய்திருக்கிருர்கள். இது சம்பந்தமான திருத்த விதிகள் கெஜட்டில் பிரசுரம் செய்யப்படும்.

—

### கோட்டையூர்

இவ்வூர் ஸ்டார் பாட்மின்டன் கிளப்பில் நடைபெற்று வந்த டபிள்ஸ் டோர்ணமெண்ட் பைனல்ஸ் 6-3-43வ காலையில் நடைபெற்றது. விளையாட்டு முடிவில் இந்நகர் திரு. க. வீ. அழ. மு. ராமனுதன் செட்டியார் அவர்களும், திரு. அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்களும் நன்கொடையாகத் தந்த வெள்ளி டமளர்கள். வின்னர்ஸாக வந்த காரைக்குடி அரு. அருணுசலம், ஜயபால்—ரன்னர்ஸாக வந்த R. வேணுகோபால், புதுக்கோட்டை கனகசபை இவர்களுக்கு கா. மூத்துப்பட்டணம் வ.ராம. ராமசாமிசெட்டியார் தலைமையில் பரிசளிக்கப்பட்டது.



## ராமகிருஷ்ண பரமஹம்சர்

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் 108 வது ஜன்ம தினம் மயிலை ராமகிருஷ்ண மடத்தில் மார்ச் 14வ சிறப்பாக நடைபெற்றது.

### ராஜாஜி பிரசங்கம்

ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார் தலைமை வகித்துப் பேசியதின் சுருக்கம்:—

மாக்ஸ்மூலர் என்ற பிரபல ஜெர்மன் ஆசிரியர் புத்தகங்கள் மூலமாகத்தான் முதன்முதலில் நான் ஸ்ரீ பரமஹம்ஸரைப் பற்றிக் கேள்வியுற்றேன். பின்னர் சுமார் 50 வருஷங்களுக்கு முன் நான் சட்டக் கல்லூரியில் படித்துக்கொண்டிருக்கையில் நாங்கள் தங்கியிருந்த விடுதியில் விவேகானந்தர் வந்து தங்கநேர்ந்தபோது தொடங்கி பரமஹம்ஸர், விவேகானந்தர் சேவைகளைத் தெரிந்து வந்திருக்கிறேன், நமது நாகரிகமும் தேச தர்மமும் மற்ற நாடுகளினுடையவைக்குச் சிறிதும் குறைவானதல்ல. அவற்றைவிட மேலான தெனவும் சொல்லலாமென்ற தன்மதிப்பு இந்தியரிடை ஓங்கச் செய்தவர் விவேகானந்தரே. அந்நிய ஆட்சியே நமது நிரந்தர விதியென்று நினைத்துத் தலை குனிந்த நம்மில் சுதந்திர லக்ஷ்யத்தைப் பெருக்கித் தலை நிமிரச் செய்தவரும் அம்மகான் தான். அப்படி விவேகானந்தர் செய்தது ஸ்ரீ பரமஹம்ஸரின் கடாக்ஷத்தால் தான்.

நமது நாட்டில் எந்த மஹான்களை எடுத்துக் கொண்டாலும் சுமார் 2000 அல்லது 3000 அல்லது 4000 வருஷங்களுக்கு முன் திகழ்ந்தவர்களாகக் கூறப்படுவதால் அதெல்லாம் அவ்வளவு தூரம் நம்மைக் கவர்வதில்லை. ஆனல், ஸ்ரீ பரமஹம்ஸர் சமீப காலத்தவர்; உயிருடனிருந்தால் அவருக்கு இப்போது 107 வயது தானுகும். புஸ்தகப் படிப்பில் ஊன்ருதவர், ஆனல் ஈசுவரானுபூதியுடன் உலக வாழ்க்கையையும் நன்ருக அறிந்தவராதலால் வாழ்க்கையை அடிப்படையாகக்கொண்ட கதைகள், உதாரணங்கள் மூலம் ஞானத்தைப் புகட்டியுள்ளார். அவருடைய வாழ்க்கையைக் கவனித்தால் பகவத்கீதை புகட்டிய முறைப்படி வாழ்ந்தவரென்பது விளங்கும். ஆதலால் அவர் காட்டிய வழியை நாம் அனுசரித்துப் பேரானந்தமடைவோமாக.

—

### மோல்மின்மீது குண்டுவீச்சு

நேற்று, 10-வது அமெரிக்கப்படை விமானங்கள் கோக்டீக் பாலத்தின் மீது பெரிய வெடி குண்டுகள் வீசியதாகக் கூட்டு யுத்த அறிக்கை அறிவிக்கிறது. இரும்புத் தூண்கள் மீதும் அடியிலும் குண்டுகள் வெடித்ததை நமது விமானிகள் கண்டனர். மோல்மீன் துறைமுகத்தின் மீது வெடிகுண்டு விமானங்களால் அன்று குண்டுகள் போடப்பட்டன. மா ஆலைகள் பெரிய கிடங்குகள் மீது குண்டுகள் வெடித்தன. இந்நடவடிக்கையில் நமது விமானங்களுக்குச் சேதம் இல்லை.

பாஸுண்டவுக் ரயில் பாலத்தை 13-ந் தேதி நமது விமானங்கள் தாழ்ந்து பறந்து சென்று தாக்கிய போது பெரிய எதிரி விமானப்படை யொன்று எதிர்த்து போரிடியது. ஒரு எதிரி போர் விமானம் நிச்சயமாகச் சேதமடைந்தது. மற்றென்றும் நாசமாயிருக்கு மெனக் கூறப்படுகிறது. நமது விமானங்களிலிரண்டைக் காணவில்லை.

—

### உணவுக் கமிஷனர்கள் எல்லோரும் ஐரோப்பியரே?

இந்தியாவைப் பிரதேசவாரியாகப் பிரித்து ஐந்து அல்லது ஆறு உணவுக் கமிஷனர்களை நியமிக்க இந்திய சர்க்கார் முடிவு செய்திருப்பது சம்பத்தமாக பதவிகள் அனைத்தும் ஐரோப்பியருக்கே கிடைக்குமென்று தெரிகிறது. அவர்களில் மூவர் அநேகமாக ராணுவத்தினராக இருக்கலாம். தவிர, சர்க்கார் ஏஜன்ஸிகள் மூலம் உணவுப் பொருள்களை வாங்க 75 கோடி ரூபாய் செலவாகுமென்று தமது வரவு செலவு திட்டப் பிரசங்கத்தின் போது பொக்கிஷ மெம்பர் குறிப்பிட்டாராயினும் 100 கோடி ரூபாய்க்கு மேல் செலவாகலாம்.

### கார்கோவை ரஷ்யர் காலி செய்தனர்

சோவியத் 15வ அறிக்கையில் பின் வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது:—

பியேவிக்குத் தெற்கே ஜெர்மனியர் முன்னதாகத் தயாரித்துவைத்துள்ள நிலயங்களிலிருந்து உக்ரமாக எதிர்த்தனர். கார்கோவ் பிரதேசத்தில் ரஷ்யத் துருப்புகள் ஜெர்மன் டாங்குகள் மோட்டார் சாதனமுள்ள ஜெர்மன் காலாட்படைகள் இவர்களுடன் உக்ரமாகப் போராடினர். டாங்கு எதிர்ப்பு பீரங்கிப் பிரயோக மூலம் தானே வேலை செய்யும் 6 ஜெர்மன் பீரங்கிகளும் 4 ஜெர்மன் டாங்குகளும் அழிக்கப்பட்டன. கைகலந்த போரிலும் யந்திர பீரங்கிப் போரிலும் 600 எதிரிகள் அழிக்கப்பட்டனர். இன்னொரு பகுதியில் சோவியத் படைகள் எதிரிகளுக்குக் கடும் சேதம் விளைவித்தபிறகு புதிய அரண் வரிசைக்குப் பின்வாங்கவேண்டிய அவசியமேற்பட்டது. ராஸ்டாவுக்கு மேற்கே கடும் பீரங்கிப் போருக்குப் பின் ஜெர்மன் காலாட் படைகளைத் தாக்கிப் பின்வாங்கும்படி நிர்ப்பந்தித்தோம்.

சோவியத் நடுநிசி அறிக்கை கூறுவதாவது:—

15-ந் தேதி உக்ரமாகப் போர் புரிந்த பின் ரஷ்ய ராணுவ மேலதிகாரிகளின் ஆக்ஞைக்கிணங்க ரஷ்யத் துருப்புகள் கார்கோவ் நகரைக் காலி செய்தன.

—

### வடகுடிப்பட்டி விநாயகர் வித்தியாசாலை

இவ் வித்தியாசாலையின் முதலாவதாண்டு நிறைவு விழா 14-3-43 காலை 9 மணிக்கு பள்ளத்தூர் அருணுசலம் செட்டியார் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் உயர்திரு மு. முத்து வெங்கடாச்சலம் ஐயரவர்கள் தலைமையில் நடைபெற்றது. வித்தியாசாலை ஆசிரியர் N. திருப்பாற்கடல் அவர்கள் ஆண்டு அறிக்கையை வாசித்தார்கள். வித்தியாசாலை மாணவ மாணவிகளின் பாட்டு பேச்சு முதலியன நடைபெற்றன. ப. ராமசாமி வேளார் அவர்கள் "மனிதப் பிறவியின் மாண்புறு செயல்" என்னும் பொருள்பற்றிப் பேசினர்கள். பிறகு திருவாளர்கள் M. ராமானுஜம் பிள்ளை பெ. வெ. சிதம்பரம், வீ. தி. சொக்கலிங்கம் ஆகியோர் கிராமக் கல்வி, பெண்கல்வி ஆகியவற்றின் அவசியத்தை, எடுத்துக் கூறி வித்தியாசாலை பல்லாண்டு பொலிவுறுமாறு வாழ்த்தினர். மாணவ மாணவிகளுக்கு பரிசுகள் வழங்கப்பட்ட பின் தலைவர் முடிவுரையில் கிராமக் கல்வியின் அவசியத்தை எடுத்துரைத்தார்கள். இராமசாமி வேளார் எல்லோருக்கும் வந்தனோபசாரம் கூறினர். வந்திருந்த எல்லோருக்கும் சந்தனம், புஷ்பம், பழம், தாம்பூலம் வழங்கிய பின் விழா இனிது முடிந்தது.

—

### விருதுநகர் முனிசிபல் தலைவர் தேர்தல்

மார்ச் 16வ. நடந்த விருதுநகர் முனிஸிபல் சபைத் தலைவர் தேர்தலில் அகில இந்திய ஏற்றுமதிச் சபை மெம்பரும் சென்னை மாகாண நாடார் மகாஜன சங்க உபதலைவருமான ஸ்ரீ வி. வி. ராமசாமி ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். தென்னிந்தியப் பிரபல காப்பித்தோட்ட முதலாளி ஸ்ரீ எம். எஸ். பெரியசாமி நாடார், உப தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷை

இவ் வருஷத்துக்கு எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்கு காரைக்குடி ஹைஸ்கூல் செண்டராக நியமிக்கப்பட் டிருக்கிறது. பரீக்ஷை 22-3-43ல் தொடங்கும். ஒரு வாரம் நடக்கும். இதில் காரைக்குடி, பள்ளத்தூர், திருப்பத்தூர் முதலிய பள்ளிக்கூடங்களிலிருந்து 95 மாணவர்கள் கலந்து கொள்வார்கள் எனத் தெரிகிறது.

—

### திண்டுக்கல் நகர சபை

13வ மாலை இம் முனிசிபாலிடிக்கு சேர்மன் தேர்ந்தெடுக்க நடந்த கூட்டத்திற்கு சர்க்காரால் நியமிக்கப்பட்ட 22 அங்கத்தினர்களில் 19 அங்கத்தினர்கள் பிரசன்னமா யிருந்தார்கள். சேர்மன் எலக்ஷனை இவ்வூர் சப் கலெக்டர் ஸ்ரீ ஆர். டி. சாரி நடத்தினர். ராவ்சாகிபு ஸ்ரீ எம். எஸ். பி. சோலை நாடார் சேர்மனுகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

—

### எங்கும் பட்டினி! ஆச்சாரியா ரே கதறுகிருர்

ஆச்சாரியா பி. ஸி. ரே விடுத்துள்ள ஒரு வேண்டுகோளின் விவரம்:—

வயோதிகம் காரணமாகவும், நோய் வாய்ப்பட்டிருத்தலாலும் நான் படுத்த படுக்கையாக இருக்கிறேன். இந்நிலையில் நம் நாட்டு மக்களின் கதறல் என் செவியில் விழுகிறது. அவர்கள் அநுபவித்து வரும் துயரங்களுக்கு எல்லையே இல்லை. லோக்குமிடந்தோறும் பட்டினியால் வாடுபவர்கள்; அவர்களது கூக்குரல். இன்னும் கொஞ்ச காலத்தில் உடுக்க உடையுமின்றி நாம் தவிக்கப்போகிறோம்.

உணவுப் பொருள் நிலைமை வெகு கோரமாக இருக்கிறது. நமக்குக் கதிமோட்சம் உண்டா என்று மக்கள் அலறும் படியான அளவுக்கு அது கடுமையாக இருக்கிறது. அரிசியையும், இதர முக்கிய பண்டங்களையும் ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு அனுப்புவது தடுக்கப்பட்டுளது. சரக்குகள் அதிகப்படியாக இருக்கும் ஜில்லாக்கள், சரக்குகள் குறைவாகவுள்ள ஜில்லாக்களுக்கு அனுப்பி உதவ வசதி இல்லை.

உணவு, உடை இவ்விரண்டிலும் தடையேற்பட்டிருக்கும் நிலைமையின் கொடூரத்தை மக்கள் உணரவேண்டும்; விலைவாசிகள் விஷம்போல் ஏறி வருவதையும் அவர்கள் உணரவேண்டும். உடனே நிவர்த்தி தேட நாம் அனைவரும் சேர்ந்து யோசிக்கவேண்டும்.

நம்முடைய உயிர் வாழ்வுக்கே ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. ஜனங்களையும், அவர்களுடைய வீடு வாசல்களையும் காப்பாற்றி ஆகவேண்டும். ஆகவே ஆபத்து மிகுந்த இந் நேரத்தில் பரஸ்பர வேற்றுமைகளை மறந்து, ஒன்றுபட்டு சிந்தித்துச் செயல் புரியுமாறு நான் அனைவரையும் கேட்டுக் கொள்ளுகிறேன்.

—

### திருச்சியில் போலீஸ் சோதனை

திருச்சி போலீஸார், மட்டக்காரத் தெருவிலுள்ள 'கலாமோஹினி' பத்திரிகை ஆபீஸையும், கள்ளத் தெருவு ஸ்ரீமதி பார்வதி அம்மாள் வீட்டையும், ஸ்ரீ வி. மருதமுத்து என்பவரின் பாலக்கரையிலுள்ள சலூனையும், அவரது வீட்டையும், குஜிலித் தெருவிலுள்ள ஸ்ரீமான்கள் ராமமூர்த்தி ராஜாராவ் வீடுகளையும், தென்னூரில் ஸ்ரீ சீனிவாசன் வீட்டையும் சோதனைகள் செய்தார்கள். ஆக்ஷேபகரமான பிரசுரங்கள் ஒன்றும் கைப்பற்றப்படவில்லை.



### கேட்டுப் பாருங்கள்

மார்ச 19வ சென்னையில் இரவு 8-30-க்கு ஆர். பி. சேதுப்பிள்ளை எழுதிய 'சேரன் நாடகம்'

20வ இரவு 8 மணிக்கு வசுந்தரா தேவி பாடுகிருர்.

,, திருச்சியில் பகல் ஒரு மணிக்கும், மாலை 6 மணிக்கும் சம்பர் பாடல்கள்

21வ திருச்சியில் காலை 8-30-க்கும். மாலை 6 மணிக்கும் கே. பி. சிவானந், தம் பிள்ளை வீணைக்கச்சேரி ஜ்வலிக்கப் போகிருர். முழுக் கச்சேரியில்லை. அதனுலென்ன?

,, திருச்சியில் இரவு 7-15-க்கு எதிர் கால நாடகம்' பி. சம்பந்த முதலியார் பேச்சு.

22வ திருச்சியில் இரவு 8 மணிக்கு மன்னார்குடி ராஜகோபால் பிள்ளை பாட்டு, கும்பகோணம் சிவவடிவேல் பிள்ளை பிடில், பழனி முத்தய்யா பிள்ளை முழவுடன். இரவு முழுக் கச்சேரியாகையால் பழய சாஸ்திரப்படி தெலுங்கில் கைவரிசை காட்ட வேண்டியிருக்கிறது போலும்!

23வ திருச்சியில் பகல் 1-40-க்கும் மாலை 5-க்கும் மதுரா காமு அம்மாள் வீணை.

24வ திருச்சியில் இரவு 7-45க்கு ஆலத்தூர் சகோதரர்கள் 'பத்மநாப பாஹி' என்று கச்சேரியைத் தொடங்குகிருர்கள். அரியக்குடி பாலிஸி, தெலுங்கு பாதி; தமிழ் பாதி.

25வ திருச்சியில் இரவு 8 மணிக்கு சித்தூர் கச்சேரி. ராஜமாணிக்கம் பிள்ளை பிடில். மற்ற பக்க வாத்தியங்கள் டோலக் உள்பட நடக்கும். என்னென்ன பாட்டுக்களைப் பாடுவாரென்பது ரகசியம்.

26வ திருச்சியில் 7-15க்கு காவடிச் சிந்தைப்பற்றி டி. கே. ஸி. பேச்சு.

,, திருச்சியில் 7. 45க்கு காவடி இசைச் சித்திரம்—டாக்டர் சிதம்பரநாதச் செட்டியார் எழுதியது.

—

### அமெரிக்காவுக்கு கான்வஸ் துணி

இந்தியாவிலிருந்து 15 கோடி கஜம் கான்வஸ் துணியை அமெரிக்க சர்க்கார் வாங்குவதாக யுத்தப் பொருளாதார போர்டும், பாதுகாப்பு சப்ளை கார்பொரேஷனும் கூட்டு அறிக்கை ஒன்றும் வெளியிட்டிருக்கின்றனர். அறிக்கை கூறுவதாவது:—

குறிப்பிட்ட காலத்துக்குள் அவைகளை அனுப்புவதற்காக, இந்திய நெசவு மில் அதிகாரிகள் 10 சதவிகிதம் அதிகமாக நெசவுக் கருவிகளை உபயோகிப்பதாக ஒப்புக் கொண்டிருக்கின்றனர். இதை பெறுவதற்கு போக்கு வரவு சாதனங்கள் கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. சகஜமான வியாபார போக்குவரத்து மார்க்கங்கள் மூலமாகவே இது கையாளப்படும்.

## மூன்றாவது யுத்தம் நிச்சயம்?

★

'மேற்குப்புற ஜனநாயக நாடுகள் ரஷ்யாவுடன் யுத்தம் முடியு முன்பு திருப்திகரமான உடன்பாட்டைச் செய்து கொண்டாலொழிய மூன்றாவது மகா யுத்தம் ஏற்படுவது நிச்சயம். ரஷ்யாவுக்கும் யுனைடெட் ஸ்டேட்ஸுக்குமிடையில் நெருங்கிய, பரஸ்பர நம்பிக்கையைக் காட்டும் உடன்பாடு ஏற்படாவிட்டால் ரஷ்யா சீக்கிரத்திலேயோ அன்றி சிறிது காலத்திற்குப் பிறகோ ஜெர்மனியுடன் சேர்ந்து உடன்பாடு செய்துகொள்ளக்கூடிய பேராபத்து ஏற்படலாம்' என்று கிறிஸ்தவ தத்துவங்களை ஆதாரமாகக்கொண்ட உலக ஏற்பாடுபற்றி ஆலோசிக்கக்கூடிய மகாநாட்டில் யுனைடெட் ஸ்டேட்ஸ் உதவி ஜனாதிபதியான மிஸ்டர் ஹென்றி வாலெஸ் கூறினார்.

## மண்ணெண்ணை இருப்பு

லைசென்ஸ் பெற்ற கிரஸின் கம்பெனி வியாபாரி அல்லது கலெக்டரால் அனுமதிக்கப்பட்டவர்கள் நீங்கலாக, வேறு ஒருவரும் எந்த சமயத்திலும் நான்கு காலன் டின் ஒன்றுக்கு மேல் மண்ணெண்ணை இருப்பு வைத்துக்கொள்ளக் கூடாதென்று கட்டுப்பாட்டு உத்தரவைச் சர்க்கார் மாற்றி யிருக்கின்றனர்.

## 'விடுதலை செய்க அல்லது விசாரணை செய்க'

★

பஞ்சாப் பிரதிநிதி சபையின் இன்றைய கூட்டத்தில் வரவு செலவுத் திட்டத்தைப் பற்றி விவாதம் நடந்தது.

ஸர்தார் சந்தோஷ சிங் பேசுகையில் காங்கிரஸ் பாதுகாப்புக் கைதிகளைச் சர்க்கார் ஒன்று விடுதலை செய்யவேண்டுமென்றும் அல்லது கோர்ட்டு முன்பு விசாரணைக்குக் கொண்டுவரவேண்டுமென்றும் வற்புறுத்தினர்.

பஞ்சாபின் வருமானத்தில் 4 கோடி ரூபாய் அதிகரித்திருந்தும் கைத் தொழில்களுக்காக செலவழிக்கப்படும் தொகையில் ஒன்றரை லட்சம் ரூபாயே உயர்ந்திருக்கிறதென்றும், மொத்த வருமானத்தில் 18 சதவிகிதம் தான் கைத் தொழிலுக்காகச் சர்க்கார் செலவிடுவதாகவும், ஆனால் போலீசுக்காக மட்டும் 2 கோடியே 12 லட்சம் ரூபாய் செலவிடப்படுவதாகவும் ஸர்தார் எடுத்துரைத்தார்.







## 'இந்தியா விபரீத தேசம்'

★

துருக்கியிலிருந்து சமீபத்தில் இங்கு விஜயம் செய்த தூதுக் கோஷ்டித் தலைவர் மிஸ்டர் எம். ஆட்டே பத்திரிகைக்கு எழுதி யிருப்பதிலிருந்து பின்வரும் விஷயங்கள் அறிவிக்கப்படுகின்றன:—

எங்கள் வருகையை தங்கள் கட்சி அல்லது அரசியல் சச்சரவுக்குப் பயன்படுத்திக் கொள்ள நினைத்தவர்கள் சீக்கிரத்தில் தங்கள் தவறை உணர்ந்து கொண்டனர். இந்தியாவிலிருக்கும் சுதந்திரத்தைக் கண்டு நாங்கள் ஆச்சர்யமடைந்தோம். அங்குள்ள சில பத்திரிகைகள், 'சர்க்காரால் நடத்தப்படும் விருந்துகளின் போது துருக்கி பத்திராசிரியர்களுக்கு உண்மை இந்தியாவை இந்திய சர்க்கார் காட்ட முடியாது. அவர்கள் கிராமங்கட்குச் சென்று துன்பங்களால் மடியும் மக்களை பார்க்கட்டும்; சிறையிலுள்ள தேசிய வாதிகளைச் சந்தித்துப் பேசட்டும் என்றும் துணிச்சலாக எழுதியிருந்தன. ஆயிரக்கணக்கான அபிப்பிராயங்களுள்ள விபரீத தேசம் இந்தியா.

'கைபர் கணவாய் முதல் அலெப்போ வரை பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் பலமும் பிரக்யாதியும் மிகவும் அதிகரித்திருக்கின்றன" சாம்ராஜ்யம் சிதறிப் போகாது என்ற நம்பிக்கை ஏற்பட்டிருக்கிற படியால் அமெரிக்காவும் பிரிட்டனும் தளவாடங்களைக் கொண்டு வந்து குவித்து, மக்களுக்கு அவற்றின் உபயோகத்தை அறிவித்து வருவதாலும் ஆபத்து ஏற்படும் என்ற பீதி அங்கு தற்போது கொஞ்சமும் இல்லை. இதுதவிர எதிர்ப் பிரசாரம் பயன்தரவில்லை. அனேக தொண்டர்கள் பயிற்சிபெற வருவதிலிருந்தே இது நன்கு புலனாகிறது.





## 700 பேர் மீது போலீஸ் சுட்டது

மேற்குக் காண்டேஷ் ஜில்லாவில் 700 பேர்கள் அடங்கிய ஒரு கூட்டத்தின்மீது போலீஸார் சுட்டதால் 15 பேர் மாண்டதாகவும், 35 பேருக்குக் காயமென்றும் தூலியாவிலிருந்து செய்தி கிடைத்திருக்கிறது. ஜில்லா மாஜிஸ்திரேட்டின் தடை உத்தரவை மீறி மேற்படி கூட்டத்தினர் தாலேபா ஜில்லா வைபவத்தை (மதசம்பந்தமானது) நடத்துவதற்காக மேற்குக் காண்டேஷில் நுழைந்ததாகக் கூறப்படுகிறது. கலையும்படியோ அல்லது சரணடையும் படியோ போலீஸார் சொன்னார்கள். ஆனால் கூட்டத்தினர் மறுத்தனர். ஆகவே போலீஸார் சு[illegible]னர். போலீசாரை நோக்கிக் கூட்டத்தினர் அம்புகளை உபயோகித்தாகக் கூறப்படுகிறது. இதனால் போலீஸாரில் மூவருக்குக் காயம்.

300 பேர் கைதியாகி யிருக்கின்றனர்.

## கட்சிப் பற்றற்ற தலைவர்கள் கூட்டம்

கட்சிப்பற்றற்ற தலைவர்களின் கூட்டமொன்று அநேகமாக ஏப்ரல் முதல் வாரத்தில் டில்லியில் நடக்குமென்று தெரிகிறது. பம்பாய் மகாநாட்டில் பங்கெடுத்துக் கொண்ட தலைவர்களில் சிலரும் இக்கூட்டத்துக்கு அழைக்கப்படலாம்.

## ஜப்பானின் விமான பலம்

ஜெனரல் மக் ஆர்தரின் ராணுவ அதிகாரி ஒருவர் கூறியதாவது:— சிறிது நஷ்டங்களும் தோல்விகளும் இருந்துங்கூட இப்பகுதியில் ஜப்பானிய விமானங்கள் பலப்படுத்தப் படுகின்றன. எதிரி விமானங்கள் நல்ல சக்தியுள்ளவை. அவர்களது விமான பலத்தைப்பற்றி குறைத்துக்கூறுவது தவறுமட்டுமல்ல. அபாயகாமானதாகும். ஜப்பானியரது விமானபலம் குறையவில்லை. அதிகமாகவே யிருக்கிறது.

## யுத்த முயற்சிக்கு விரோதமாகப் பேசியதாக தேவஸ்தான மானேஜர்மீது குற்றப் பத்திரிகை

சென்ற 9-1-43-ந் தேதி சிக்கலில் நடைபெற்ற யுத்தப் பிரசாரக் கூட்டத்தில் தலைமைவகித்து யுத்த முயற்சிக்கு விரோதமாகப் பேசியதாக சிக்கல் தேவஸ்தான மானேஜர் ஸ்ரீ எஸ், வி. ஸ்ரீனிவாஸய்யங்கார் (பி. ஏ. பி. எல்) மீது பாதுகாப்பு சட்டப்படி தொடரப்பட்ட வழக்கில் நாகபட்டணம் அடிஷனல் முதல் வகுப்பு மாஜிஸ்டிரேட் பாதுகாப்பு சட்டப்படி எதிரிமீது 9-ந் தேதியன்று குற்றப்பத்திரிகை படித்தார்.

## நோட்டீஸ்

### சிவகெங்கை டி. மு. கோர்ட்டு

1938ளு O. S. No. 127
1942ளு E. P. No. 349

உ. சா. முத்தளகு அம்பலம் — வாதி
பூ. சின்னையா நாடான் — பிரதிவாதி

வாதிக்கு வரவேண்டிய ஈடு டிக்கிரிக்காக ஷை வாதிக்கு பாத்தியமான சொத்துகள் ஏலத்துக்கு வருகிறபடியால் ஷை ஏல இஸ்தியாரின் ஷரத்துக்களை நிர்ணயிப்பதற்காகவும் ஏலத்தில் வாதி கேள்க்க அனுமதி விஷயமாயும் 12—4—43உ வாயிதா ஏற்பட்டிருக்கிற தென்று இதனால் பிரதிவாதிக்கு தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

S. சூரியநாராயண சர்மா, வாதி வக்கீல்
சிவகெங்கை 14—3—43



## ஸ்ரீ பாண்டியன் செட்டியார் கொலை

ராமநாதபுரம் பிரபல அரிசி வியாபாரி ஸ்ரீ பாண்டியன் செட்டியார் 7-ந் தேதி இரவில் தனது ரைஸ் மில்லில் இருக்கும் பொழுது சிலர் அவரை அரிவாளால் பல இடங்களில் குத்தியும் வெட்டியும் படு காயப்படுத்தி ஓடிவிட்டார்கள் எனக் கூறப்படுகிறது. ராமநாதபுரம் சர்க்கார் ஆஸ்பத்திரியில் அநுமதிக்கப்பட்ட ஸ்ரீ பாண்டியன் செட்டியார் சில மணி நேரத்திற்கெல்லாம் இறந்துவிட்டார். ராமநாதபுரம் போலீசார் புலன் விசாரித்து வருகின்றனர்.

## நாம் 5+100 பேர்

சூதாட்டத்தின் தந்திரத்தினால் வறுமையடைந்து வனவாசம் சென்ற பாண்டவ சகோதரர்களைப் பார்ப்பதற்காக, கோபத்தோடு கூடிய கர்வத்துடன் கௌரவர்கள், திருதராஷ்டிரனுடைய கொலு மண்டபத்திலிருந்து துவைத வனத்துக்குச் சென்றார்கள்.

துரியோதனனை வெறுப்பதற்கு, பாண்டவர்களுக்கு எல்லாவித காரணங்களும் இருந்தன. கௌரவர்கள், கந்தர்வர்களால் தோற்கடிக்கப்பட்டு சிறைப்படுத்தப்பட்டதைக் கண்டு அவர்கள் மிகவும் மகிழ்ச்சி யடையவேண்டும்.

ஆனால், அவர்கள் மகிழ்ச்சியடையவில்லை. கந்தர்வர்கள் துரியோதனனுடைய பட்டாளத்தை முறியடித்து, கௌரவ அரசர்களை விலங்கிவிட்டுச் செல்லும்போது, பயமடைந்த துரியோதனனுடைய ஆட்கள் பாண்டவர்களை உதவிக்கு வரும்படி கூக்குரலிட்டு அழைத்தார்கள். அதைக் குறித்து ஏளனம் செய்த தமது சகோதரர்களை சாந்தப்படுத்தி, யுதிஷ்டிரர் கூறியதாவது:—"கொடூரமான வார்த்தைகளுக்கு இது சமயமல்ல! நமக்கும், கௌரவர்களுக்கும் சண்டையிலிருக்கும்போது, அவர்கள் நூறு பேர், நாம் ஐவர்கள், ஆனால் மூன்றாவதான அன்னியர் நம்மிருதிறத்தாரில் யாரைத் தாக்கினாலும், நாம் ஐந்துடன் நூறு சேர்ந்தவர்களாவோம்!"

மகாபாரதத்தினுடைய படிப்பினைகளை சீன தேசம், இந்தியாவைவிட விரைவாக அனுபவத்துக்குக் கொண்டுவந்திருக்கிறது. அங்கு, பலம் பொருந்திய ஆனால் எண்ணிக்கையில் குறைந்த பொதுவுடைமைக் கட்சியினர், ஜப்பானியர்களுக்கு எதிரிடையாக, தங்களுடைய ஜன்ம விரோதிகளான சீன ராணுவத்தலைவர் சியாங்கே ஷேக் அவர்களுடைய கூட்டத்தோடு ஒன்று சேர்ந்திருக்கிறார்கள்.

பாண்டவ சகோதரர்களைப்போல நடந்துகொள்ளுங்கள். பிரிட்டிஷ் அதிகாரிகளிடம் கொடூரமான வார்த்தைகளை விட்டுவிடுங்கள். நம் மெல்லோரையும் தாக்க முயற்சிக்கும் ஜப்பானியர்களை விரட்டியடிப்பதற்கு அவர்களுக்கு உதவி செய்யுங்கள்.

நீங்களே யோசித்துப் பார்த்து ஒன்றுபட்டு உழையுங்கள்!

அதுதான் தேசீயப் போர்முனை

CPU 8 D.TM.

## காகிதப் பிரச்னை

மத்திய சர்க்காரும் மாகாண சர்க்கார்களும் உட்பட, காகிதம் உபயோகிப்பவர்கள் அனைவர்க்கும் காகிதத்தை அளந்து கொடுக்க வேண்டும் என்றும், சிக்கன முறைகளைக் கண்டுபிடிப்பதற்காக சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் மத்திய சட்டசபைக் கட்சிகளின் பிரதிநிதிகளுமடங்கிய சிறிய கமிட்டி யொன்றை அமைக்க வேண்டுமென்றும், கவர்ன்மெண்டுக்குச் சிபார்சு செய்யும் தீர்மானம் ஒன்றை 1943-ஆம் மார்ச்சு-மீ 10-உ கனம் ஷாஸ்ஸென் இமாம் அரசாங்க சபையில் கொண்டுவந்தார்.

இந்தத் தீர்மானத்தைப்பற்றிப் பேசுகையில் வர்த்தக இலாகாக் காரியதரிசி கனம் என். ஆர். பிள்ளை பின்வருமாறு கூறினார்: 1943—44ல் இந்திய காகித ஆலைகளின் உற்பத்தியில் 30 சத விகிதத்தை சிவில் பிரஜைகளின் உபயோகத்துக்குக் கொடுப்பதென்று சர்க்கார் தீர்மானித்திருக்கிறார்கள். உற்பத்தியைப் பெருக்குவது விஷயமாக, இந்தப் பிரச்னையை கவர்ன்மெண்ட் நன்கு உணர்ந்திருக்கிறது. இதற்காகத் தன்னாலான முயற்சிகளை யெல்லாம் அது செய்துவருகிறது. அந்த முயற்சிகளின் பலனாகச் சென்றவருஷத்தைக் காட்டிலும் 1943—44ல் உற்பத்தி 15% அதிகமாய் இருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. ஏற்றுமதி விஷயமாக சென்ற சில மாதங்களாக வியாபாரார்த்தமாய் நடக்கும் ஏற்றுமதி பெரிதும் குறைக்கப்பட்டிருக்கிறது. இப்போது மொத்த உற்பத்தியில் 5%-க்கும் குறைவாகவே ஏற்றுமதி செய்யப்படுகிறது. கிடைக்கக்கூடிய சப்ளையைப் பத்திரிகைகளுக்கு நியாயமாக பங்கீடு செய்து கொடுக்கும் விஷயம் ஆலோசனையிலிருக்கிறது. இந்த நிலைமை சம்பந்தமாய் ஏற்பட்டுள்ள பிரச்னை இரண்டுவிதமானது. முதலில் பத்திரிகைகளின் விஷயத்தில் பத்திரிகைத் தாள் உபயோகத்தைச் சிக்கனப்படுத்த வேண்டும்; இரண்டாவது வெளிநாடுகளிலிருந்து வரும் காகிதத்தை நியாயமான வகையில் பிரித்துக் கொடுக்க வேண்டும். ஒவ்வொரு பத்திரிகைக்கும் உச்ச அளவு ஒன்றைத் தீர்மானித்து அதற்குமேல் உபயோகிக்கக்கூடாதென்று தடை விதிப்பதன் மூலம் முதல் பிரச்னையைத் தீர்த்து விடலாம். ஆனால் இது எதேச்சாதிகாரமான வழி என்று தள்ளி பத்திரிகைகளின் விலையை உயர்த்தும் முறையை கவர்மெண்ட் கையாண்டிருக்கிறது. கவர்மெண்டால் கொண்டுவரப்பட்டுப் பத்திரிகைக்காரர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட திட்டத்தின் பிரகாரம் விலைகள் படிப்படியாய் ஏற்றப்பட்டிருக்கின்றன. சாதாரண அளவில் உள்ள நாலுபக்கம் கொண்ட பத்திரிகையின் விலை இனிமேல் இரண்டணாவாயிருக்கும். பெரும்பாலான தினசரிகள் இனிப் பக்கங்களை ஆறிலிருந்து நாலாகக் குறைத்துக்கொண்டுவிடுமென்றும் அதனால் தானாகவே $33\frac{1}{3}\%$ சிக்கனம் ஏற்பட்டுவிடுமென்றும் எதிர்பார்க்கப்படுகிறது. விலையுயர்ந்தால் பத்திரிகை வாங்குவோர் எண்ணிக்கையும் குறைந்துவிடும். இந்த ஏற்பாட்டில், மொத்த இடத்தில் 50%க்கு மேல் விளம்பரத்துக்கு உபயோகிக்கக்கூடாது என்றும் தீர்மானிக்கும் உத்தேசமும் இருக்கிறது. அத்துடன் விளம்பரக் கட்டணங்களை 50% உயர்த்த வேண்டுமென்றுங் கூறப்பட்டிருக்கிறது. இது பிரிட்டிஷ் வழக்கத்துக்கு சரியாக இருக்கிறது. மேலும் பல பத்திரிகைகளுக்கு விளம்பரத்தினால் தான் முக்கிய வருவாய் கிடைக்கிறது. பத்திரிகைகளுக்கும் உயிரோடு இருக்கும் உரிமை உண்டென்பதை இங்கு எடுத்துக் கூற விரும்புகிறேன்.

மொத்தத்தில் சுமார் 1250 பத்திரிகைகள் இருக்கின்றன என்பதையும், ஒவ்வொன்றுக்கும் தனித்தனியாய் பத்திரிகைத் தாள் விநியோகம் உண்டென்பதையும் ஞாபகம் வைத்துக்கொண்டால் இந்தப் பிரச்சினை எவ்வளவு சிக்கலானதென்பது தெரியும். ஆயினும் சீக்கிரமே சரியான திட்டமொன்று தயாராய்விடுமென்று எதிர்பார்க்கிறோம். சிறிய பத்திரிகைகளுக்கு விசேஷ சலுகை காட்டுவதென்று சர்க்கார் தீர்மானித்திருக்கிறது. பத்திரிகைத் தாள் போதிய அளவில் கிடைக்காத பட்சத்தில் நியாயமான அளவுக்கு இந்தியாவில் செய்யப்படும் காகிதத்தைப் பத்திரிகைகளுக்குக் கொடுக்கும் விஷயமும் ஆலோசிக்கப்படும்.

கனம் பிள்ளை இப்படி நிலைமையை விளக்கிய பிறகு, தீர்மானத்தைக் கொண்டு வந்தவர் அதை வாபஸ் வாங்கிக் கொண்டார்.

---



### சேகரடேரியட் காரியாலயம்
#### ஈஸ்டரில் இடம் மாறும்

சேகரடேரியட் காரியாலயம் ஈஸ்டர் விடுமுறையின் போது செயின்ட் சார்ஜ் கோட்டைக்கு மாற்றப்படுமென்று தெரிகிறது.





### அபாய அறிவிப்புச் சங்கிலியை இழுத்ததாக
#### எதிரிக்கு இரண்டு வருஷம்

1-2-43 தஞ்சைக்கு வந்துகொண்டிருந்த பாசஞ்சர் வண்டியில் அபாய அறிவிப்புச் சங்கிலியை இழுத்து வண்டியை ஆலக்குடிக்கும் தஞ்சைக்கும் மத்தியில் நிற்கும்படி செய்ததாகவும் பின்பு ஆட்சேபகரமான துண்டுப் பிரசுரத்தை படித்துக் கொண்டிருந்ததாகவும் காரைக்குடி வி. கே. சுந்தரம் பிள்ளை மீது குற்றம் சாட்டப்பட்ட வழக்கில் தஞ்சை ஸ்பெஷல் 1-வது வகுப்பு மாஜிஸ்திரேட் பாதுகாப்புச் சட்டப்படி எதிரியைக் குற்றவாளி என்று கருதி, அவருக்கு 2 வருஷம் கடுங்காவல் விதித்தார்.



Edited Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi. (S. INDIA)

